வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,
அவர்கள் இயற்றிய

நூற்றொகுதி

## இரண்டாம் பகுதி

# 6

# சித்திர கவி விளக்கம்

# சித்திர கவி விளக்கம்

## முகவுரை

சென்னைப் பல்கலைக் கழகத்தார் 1897 ஆம் பி. ஏ. வகுப்பிற்குத் தமிழ்ப் பாட புத்தகங்களுள் ஒன்றாகத் தண்டி அலங்காரம் சொல்லணியியல் வைத்திருந்தனர். அக்காலத்தில், சுத்தமான பாடத்தோடு கூடிய தண்டியலங்காரப் பிரதி கிடைப்பதரிதாயிருந்தது. சித்திர கவிகளைச் சித்திரங்களில் அமைத்து நோக்குதற்குச் சித்திர உருவங்கள் இன்னவாறு தீட்டப்பட வேண்டுமென்றும், எழுத்துக்களை இன்னவாறு அமைக்கவேண்டுமென்றும் செவ்வனே புலப்படாமையினால், மாணாக்கர்கள் பெரிதும் இடர்ப்பட்டமை கண்டு, ஆசிரியர் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்கள், சித்திர கவிகளின் இயல்பு நன்கு புலப்படச் சித்திர கவி விளக்கம் என்னும் சிறு புத்தகமொன்றைத் தமது மாணாக்கர்களின் உபயோகத்திற்கென்றே அச்சிட்டு உபகரித்தனர். பின்னர், ஆசிரியர் தம்மிடம் தமிழ் பயின்ற இயற்றமிழ் மாணவர் தண்டியலங்காரம் பாடங்கேட்ட காலத்துத் தண்டியலங்கார சித்திர கவிகளையும் மற்றும் வடமொழி அணியிலக்கணங்களிற் கண்டு புதியனவாகப் புனைந்த சில சித்திர கவிகளையும் ஒருங்கு சேர்த்துச் சித்திரமமைத்துதவினர். ஆசிரியர் தாமே தண்டி அலங்காரத்தைச் சுத்தமாக அச்சிட்டுத் தமிழ் உலகிற்கு உபகரிக்கக் கருதியிருந்ததுண்டு. அஃது நிறைவேறாமையின், தமிழ் அணி நூல்களைக் கற்கும் மாணாக்கர்கட்குப் பயன்படல் கூடுமெனக் கருதி இச்சித்திர கவி விளக்கத்தை உதாரணச் செய்யுட்களுக்கு உரையும் வரைந்து சேர்த்து வெளிப்படுத்தத் துணிந்தேம். ஆசிரியர் தமிழ் வளர்ச்சிக்குச் செய்த எச்செயலையும் வீணாக விடக்கூடாதென்ற நன்னோக்கத்தையே கடைப்பிடித்து ஒழுகும் அன்னோர்தம் குமாரராகிய ஸ்ரீ வி. சூ. சுவாமிநாதன் அவர்கள் செய்து வரும் நன்முயற்சியைத் தமிழ் உலகம் பாராட்டியருள அதனைப் பெரிதும் வணக்கத்தோடு வேண்டிக்கொள்கின்றேம்.

கோயம்புத்தூர்,
8—2—1939.

ந. பலராம ஐயர்

# பொருளடக்கம்

# சித்திர கவி விளக்கம்

## 1. சித்திர கவி

கோமூத் திரியே கூட சதுர்த்தம்
மாலை மாற்றே யெழுத்து வருத்தனம்
நாக பந்தம் வினுவுத் தரமே
காதை கரப்பே கரந்துறைச் செய்யுள்
சக்கிரஞ் சுழிகுளஞ் சருப்பதோ பத்திரம்
அக்கரச் சுதகமு மவற்றின் பால.

இச்சூத்திரம் சித்திர கவிகளின் வகை உணர்த்துவது.

இதன் பொருள் :—கோமூத்திரி, கூட சதுர்த்தம், மாலை மாற்று, எழுத்து வருத்தனம், நாக பந்தம், வினுவுத்தரம், காதை கரப்பு, கரந்துறைச் செய்யுள், சக்கிர பந்தம், சுழி குளம், சருப்பதோபத்திரம், அக்கரச் சுதகம் என்னுமிவை மேற்கூறி வந்த சொல்லணியின்பாற்படும் (எ - று.)

'அக்கரச் சுதகமும்' என்பதன்கணுள்ள எச்ச உம்மையால், நிரோட்டகம், ஒற்றுப்பெயர்த்தல், மாத்திரைச் சுருக்கம், மாத்திரை வருத்தனை, முரச பந்தம், திரிபாகி, திரிபங்கி, பிறிதுபடு பாட்டு, விருச்சிக பந்தம், வில்வ தள பந்தம், இரத பந்தம், சதுரங்க துரக கதி பந்தம், கடக பந்தம், சிவலிங்க பந்தம் முதலியனவும் இச்சித்திர கவி வகையிற் கொள்ளப்படும்.

## 2. கோமூத்திரி

பசு மாடு நடந்துகொண்டே மூத்திரம் பெய்ய உண்டாகும் சுவட்டின் வடிவாக அமைக்கப்பட்ட ரேகையிலே எழுத்துக்கள் அமையப் பாடிய பாட்டு கோமூத்திரியாகும். கோ - பசு, மூத்திரி- மூத்திர வடிவுடையது.

இதற்கு உதாரணச் செய்யுள்:-

"பருவ மாகவி தோகன மாலையே
பொருவி லாவுழை மேவுன கானமே
மருவு மாசைவி டாகன மாலையே
வெருவ லாயிழை பூவணி காலமே." (க)

இதன் பொருள் :—இது ஒ பருவம் ஆக - இதுவோ தலைவர் குறித்த கார்ப்பருவமாதல் வேண்டும்; கனம் மாலை - மேக வரிசைகள், ஆசை மருவும் - திக்குக்களிலே பொருந்தும்; (அதுவேயுமன்றி), விடா கன மாலையே - (கனம் மாலை விடா) அதிகமாக மாலைப்பொழுதிலே மழை பொழிதலை நீங்கா (எனவே, மிகவும் பொழியும்); பொருவு இலா உழை - நிகரற்ற மான்கள், கானமே மேவன - காட்டின்கண்ணே விரும்பி விளையாடுவன

கோமூத்திரி



ஆயின; (ஆதலால்) ஆயிழை - குற்றமற்ற அணிகளையுடையாய், வெருவல் - அஞ்சாதொழிவாயாக; பூ அணி காலமே - தலைவர் விரைவில் இங்கு வந்து நம்மைப் பூக்களால் அலங்கரிக்கும் காலம் இதுவே (எ - று.)

மேவன - விரும்புவன. ஒப் : "மேவன செய்யும் புதல்வன் றாய்க்கே." (குறுந். 8). இது பருவங்கண்டு வருந்திய தலைவியைப் பாங்கி தேற்றியது.

---

## 3. கூட சதுர்த்தம்

நான்காமடியிலுள்ள எழுத்துக்கள் மற்றைய மூன்றடிகளுள்ளும் மறைந்து நிற்குமாறு இயற்றப்படும் செய்யுள் கூட சதுர்த்தமாகும்.

கூடம் - மறைவு, சதுர்த்தம் - நான்காவது. மறைவாகிய நான்காமடியை உடையதென்பது பொருள். இதற்கு உதாரணச் செய்யுள் :—

1. "புகைத்தகைச் சொற்படைக் கைக்கதக்
    கட்பிறைப் பற்கறுத்த
பகைத்திறச் சொற்கெடச் செற்றகச்
    சிப்பதித் துர்க்கைபொற்புத்
தகைத்ததித் தித்ததுத் தத்தசொற்
    றத்தைப்பத் தித்திறத்தே
திகைத்தசித் தத்தைத் துடைத்தபிற்
    பற்றுக் கெடக்கற்பதே." (உ)

இச்செய்யுளின் நான்காமடியிலுள்ள எழுத்துக்களெல்லாம் ஏனைய மூன்றடிகளுள்ளும் நிற்குமாறு காண்க.

இதன் பொருள் :—புகை தகை சொல் - புகையும் நெருப்பின் தன்மையையுடைய சொற்களையும், படை கை - ஆயுதங்களைப்பற்றிய கைகளையும், கதம் கண் - கோபம் பொருந்திய கண்களையும், பிறை பல் - பிறைத்திங்கள் போலும் வளைந்த வக்கிர தந்தங்களையும் ; கறுத்த - கருநிறத்தையுமுடைய, பகை திறம் - பகைவராகிய அசுர சாதியென்னும், சொல் கெட - பேரும் கெட்டழிய, செற்ற - தொலைத்த, கச்சி பதி துர்க்கை - காஞ்சீபுரத்திற் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் துர்க்கா தேவியாகிய, பொற்பு தகைத்த - அழகு தங்கிய, தித்தித்த - இனிமை வாய்ந்த, துத்தத்த - யாழின் இசை போலும், சொல் - சொல்லையுடைய, தத்தை - கிளி போன்றவளிடத்து, பத்தி திறத்தே திகைத்த சித்தத்தை - பக்தி செய்யும் விஷயத்தில் மயக்கமடைந்து தடுமாறிய உள்ளத்தை, துடைத்த பின் - மயக்க நீங்கிய பிறகு, பற்று கெட கற்பது - அகங்கார மமகாரங்களாகிய இரு வகைப் பற்றுங் கெட்டு ஞானத்தைப் பெறுவது உண்டாகும் (எ - று.)

'துர்க்கையாகிய தத்தையின் பத்தித்திறத்தே' எனக் கூட்டுக. அகங்காரம் - யான் என்னும் பற்று; மமகாரம் - எனதென்னும் பற்று. ஒப் : "யானென தென்னுஞ் செருக்கறுப்பான்" (குறள் - 346).

இனிக் கூட சதுர்த்தத்திற்கு இலக்கணம் **மாறனலங்கார**முடையார் முன் சொன்னதற்குச் சிறிது வேறுபாட்டுடன் பின் வருமாறு கூறுவர் :

"பாடலி னுலாம் பதம்பொறி வரியிடைக்
கூடமுற் றதுவே கூட சதுர்த்தம்."

கூட சதுர்த்தமாமாறுணர்த்துதனுதலிற்று.

இதன் பொருள் :—நாலடியானுயவொரு செய்யுளி னுலாம் பாதம் ஏனைய மூன்று பாதங்களையுமேனின்று கீழிழிந்தும் கீழ் நின்று மேலேறுவதுமாக எழுதி முடித்த வரி மூன்றி னிடை வரியின் மறைந்து நிற்பது கூட சதுர்த்தமா மென்றவாறு. இதற்கு உதாரணம்

2. “ நாதா மானதா தூய தாருளா
ணீதா னுவாசீ ராம னுமனு
போதா சீமானு தரவி ராமா
தாதா தாணீ வாமனு சீதரா.” (௫)

இதன் பொருள் :—நாதா - சுவாமியே! மானதா - என் மனத்திலுள்ளவனே! தூய தார் உளாள் நீதான் நாவா - பவித்திரம் (பரிசுத்தம்) பொருந்தின தாமரையிலுள்ளாளாக (இலக்குமி



யாவது) நீயாக (நீயாவது) என்னுடைய நாவிலேவந்துறைவீராக; அதுவுமன்றி, சீராமன் ஆம் மனு - சக்கிரவர்த்தி திருமகனாகிய

மன்னனே! சீமான் - அழகுடையவனே! ஆதர இராமா - சகலரும் விரும்பு மிராமனே! வாமன சீதரா போதா - வாமனனே! சீதரனே! ஞான மயமானவனே! தா தா தாள் நீ - நீ உனது திருவடித் தாமரைகளைத் தந்தருள்வாயாக (எ - று.)

இஃது கடவுள் வாழ்த்து என்னும் துறை.

---

## 4. மாலை மாற்று

இஃது ஒரு செய்யுளின் முதற்கணின்று படிக்கும்போது முடிந்தவாறு போல, இறுதியிலே தொடங்கிப் படித்தாலும் அச்செய்யுளே வர இயற்றப்பட்ட செய்யுளாகும். மாலை மாற்று - மாலைபோல மாறுதலுடையது; மாலை - வரிசை, மாற்று - மாறுதலுடையது எனினுமாம்.

"ஒருசெயுண் முதலீ றுரைக்கினு மஃதாய்
வருவதை மாலை மாற்றென மொழிப."

என்பது மாறனலங்காரம். இதற்குதாரணம்:—

1. "நீவாத மாதவா தாமோக ராகமோ
தாவாத மாதவா நீ." (சு)

இதன் பொருள்:—நீவாத மாதவா - நீங்காத பெருந்தவமுடையோனே! தா மோக ராகமோ தாவாது - வலிய மயக்க வேட்கையோ நீங்காது; அம் மாது அவா நீ - (ஆதலால்) அழகிய பெண்ணினுடைய ஆசையினை நீக்கியருள்வாயாக (அவள் விருப்பத்தை நிறைவேற்றுவாயாக) (எ - று.)

இது பாங்கி கூற்று.

2. "வாயாயா நீகாவா யாதாமா தாமாதா
யாவாகா நீயாயா வா." (ரு)

இதன் பொருள்:—வாயா யா - எமக்கு வாயாதன (கிடையாதவை) யாவை? நீ காவாய் - நீ எம்மைக் காத்தருள் புரிவாய்; யாதாம் - (இன்றேல்) யாதாகும்? மாது ஆம் மா தா - இம்மாது பெரிய வருத்தமுறுவள்; யா ஆகா - (நீ விரும்பினல்) எவை முடியாதன? ஆயா நீ வா - யான் கூறியவற்றை நன்காராய்ந்து நீ வருக (எ - று.)

தலைவியின் ஆற்றாமையைப் பாங்கி தலைவற்குணர்த்தியது. ஆயா - ஆயனே என விளித்ததுமாம்.

3. "பூவாளை நாறுநீ பூமேக லோகமே
பூநீறு நாளைவா பூ." (சு)

இதன் பொருள் :—பூவாளை நாறும் நீ - இயல்பாய்ப் பூப்பு இல்லாதவளை மணந்து புலால் நாற்றம் வீசும் நீ, பூ லோகம்







மேகமே - பூவையும் பொன்னையும் மழையாகச் சொரியும் மேகமோ? பூ நீறு நாளை வா - பூவும் திருநீறுந் தரித்து நாளைய தினம் வருவாய், பூ - இவளிப்பொழுது பூப்பினளாய் இருக்கின்றாள் (எ - று.)

பூ மேகம், லோக மேகம் என்று தனித்தனி கூட்டுக. பூவைச் சொரியும் மேகம் புட்கலாவருத்தம் என்றும் பொன்னைச் சொரியும் மேகம் சங்காரித்தம் என்றும் கூறப்படும். மணத்தல் - கலத்தல். பூப்புனைதல் புலால் நாற்றம் நீங்குதற்கும், திருநீறு புனைதல் குற்றம் நீங்கிப் பரிசுத்தமடைவதற்குமாம். பரத்தையர் சேரி சென்று மீண்ட தலைவற்குப் பாங்கி வாயின்மறுத்துரைத்த தாம் இச்செய்யுள்.

மேற்கூறிய மூன்று உதாரணச் செய்யுட்களும் இறுதியிலே தொடங்கிப் படிக்கும்போதும், முதற்கணின்று படிக்க முடிந்தது போல முடியுமாறு நோக்குக.

---

## 5. எழுத்து வருத்தனம்

எழுத்து வருத்தனமாவது, யாதேனும் ஒரு பொருள் பயக்கும் ஒரு மொழியை எடுத்துக்கொண்டு அது தானே வெவ்வேறு சொல்லாய் வெவ்வேறு பொருள்படுமாறு எழுத்துக்களை ஒவ்வொன்றாகச் சேர்த்து வளர்ப்பதாகும். வர்த்தநம் - வளர்த்தல். இதற்கு உதாரணம்:—

“ஏந்திய வெண்படையும் முன்னா ளெடுத்ததுவும்
பூந்துகிலு மாலுந்தி பூத்ததுவும்—வாய்ந்த
வுலைவி லெழுத்தடைவே யோரொன்றாச் சேர்க்கத்
தலைமலைபொன் றாமரையென் றாம்.” (எ)

இதன் பொருள்:—மால் - திருமால், ஏந்திய வெண்மை படையும் - கையிலேந்திய படைக்கலமாகிய வெள்ளிய சங்கும், முன் நாள் எடுத்ததுவும் - முற்காலத்தில் (இந்திரன் பொழிந்த மழையைத் தடுக்க) மேலே குடையாக உயரத் தூக்கிப் பிடித்ததும், பூ துகிலும் - அழகிய ஆடையும், உந்தி பூத்ததுவும் - நாபியில் மலர்வித்ததும் (என்ற இவற்றில்), வாய்ந்த - பொருந்திய, உலைவு இல் எழுத்து அடைவே ஓர் ஒன்றா சேர்க்க - குற்றமற்ற எழுத்துக்களை முறையே ஒன்றன்மேலொன்றாகச் சேர்க்க, (அது) தலை மலை பொன் தாமரை என்று ஆம் - தலை, மலை, பொன், தாமரை என்று பொருள் படுவதாகும் (எ - று.)

திருமால் ஏந்திய வெண்படை சங்கு; அது கம்பு; அதினின்றும் எடுத்துக்கொண்டது **கம்**; இதன் பொருள் தலை. இதனுடன் ‘**ந**’ என்னும் எழுத்தை முன்பு சேர்க்க **நகம்** என்

றாகும்; இதன் பொருள் மலை. இனி இதனுடன் 'க' என்ற எழுத்தைச் சேர்க்கக் 'ககம்' என்றாகிப் பொன் என்று பொருள்படும். முடிவில் இக்'ககம்' என்னுஞ் சொற்கு முன்பு 'கோ' என்ற எழுத்தைச் சேர்க்கக் 'கோககம்' என்றாகித் தாமரை என்று பொருள்படுவது காண்க. கம், நகம், கநகம், கோகநகம் என்று எழுத்து வருத்தனமானதுங் காண்க.

---

## 6. நாக பந்தம்

பாம்புகள் ஒன்றோடு ஒன்று பின்னிப் புணர்ந்து விளையாடுவனபோலச் சித்திரம் வரைந்து உபதேச முறைப்படி அப்பாம்புருவங்களில் கணக்கிட்ட அறைகள் வகுத்துச் சந்திகளில் நின்ற அறைகளிற் பொதுவாக எழுத்துக்களமைய ஒரே எண்ணிக்கை கொண்ட எழுத்துக்களாலான கவிகள் சித்திரத்திற் பொருந்தப் பாடுவது நாக பந்தமாம். இங்ஙனமமைக்குங்கால் கவிகளின் மொத்த எழுத்துக்கள் சித்திரத்திற் சுருங்கித் தோன்றும். இச் சித்திர கவியில் இரட்டை நாக பந்தம், அஷ்ட நாக பந்தம் முதலிய சில வகைகளுமுண்டு. இரட்டை நாக பந்தத்திற்கு இலக்கணம் பின் வரும் வெண்பாவானுணரலாம் :

"வாலு ளிருமூன்றும் தலையி லிரண்டெழுத்தும்
மூலைக ளைன்கும் வயிறிரண்டும் ஐவைந்தாய்
நாலெட்டு நாலைந்தே மாகி நடைபெறுமே
சேவிட்ட கண்ணரவின் சீர்."

இதற்கு உதாரணம் பின் வருமாறு :—

1. "அருளின் றிருவுருவே யம்பலத்தா யும்பர்
தெருளின் மருவாச்சீர்ச் சீரே— பொருவிலா
வொன்றே யுமையா ளுடனே யுருத்தரு
குன்றே தெருள வருள்." (அ)

எனவும்;

2. "மருவி னவருளத்தே வாழ்சுடராய் நஞ்சு
பெருகொளியான் மேயபெருஞ் சோதித்—திருநிலா
வானஞ் சுருங்க மிகுசுடரே சித்த
மயரு மளவை யொழி." (க)

எனவும் வரும்.

இவற்றின் பொருள் :—

1. அருளின் திரு உருவே - கருணையின் அழகிய வடிவமாக உள்ளவனே! அம்பலத்தாய் - திருச்சிற்றம்பலத்தில் நடனம்



இரட்டை நாகபந்தம்

புரியும் நடராஜ மூர்த்தியே! உம்பர் தெருளின் மருவாச் சீர்ச் சீரே - தேவர்களின் அறிவிற்கும் எட்டாத (அறியவொண்ணாத) சிறப்பினையுடைய புகழை உடையோய்! பொருவிலா ஒன்றே - நிகரற்ற ஏக மூர்த்தியே! உமையாள் உடனே உரு தரு குன்றே - பார்வதி தேவியோடு கூடிய உருவத்தைப் பக்தர்களுக்குக் காட்சி

யளிக்கும் மலை போன்றவனே! தெருள அருள் - (யாங்கள்) தெளிந்த ஞானத்தைப் பெற அருள் செய்வாயாக (எ - று.)

2. மருவினவர் உள்ளத்தே வாழ் சுடரே - அடைந்தவர் மனத்திலே குடிகொண்டிருக்கும் ஒளியுருவமானவனே! நஞ்சு பெருகு ஒளியான் மேய பெருமை சோதி - (திருமிடற்றில்) விடத்தாலுண்டாகிய மிக்க பிரகாசத்தோடு பொருந்திய பெருஞ்சோதி சொரூபியே! திரு நிலா வானம் சுருங்க மிகும் சுடரே - அழகிய மதியின் கிரணம் பரந்த ஆகாயமும் சுருங்கும் படி மேலோங்கிய ஒளியே திருமேனியாக வாய்ந்தோய்! சித்தம் மயரும் அளவை ஒழி - மனமயங்கும் காலத்தை எமக்கு நீக்கி யருள்வாயாக (எ - று.)

இக்கவிகளிரண்டும் இரண்டு பாம்புகள் பின்னிப் புணர்ந்து விளையாடுவன போல அமைத்த சித்திரத்திற் பொருந்த வரையும் போது இரண்டு செய்யுட்களிலுமுள்ள நூற்றுப் பதினெட் டெழுத்துக்களும் தொண்ணூற்றாறாகச் சுருங்கியமையும். இவ்விரு செய்யுட்களிலுமுள்ள முதலெழுத்துக்கள் இரண்டும் ஒவ்வொன் றாக இரண்டு தலைகளிலும், ஐவைந்தாக எழுத்துக்களிருபது நான்கு மூலைகளிலும், ஐவைந்தாக எழுத்துக்கள் பத்து இரு வயிறுகளிலும், எழுத்துக்கள் ஒன்பது இரண்டு வால்களிலும், எஞ்சிய எழுத்துக்கள் நடுவிலுள்ள உறுப்புக்களிலுமாக எழுதப் படும். இருபத்திரண் டெழுத்துக்கள் சந்திகளிலே நின்று இரு கவிகளுக்கும் பொதுவாக அமைவனவாம். இவை நாற்பத்து நான்கெழுத்துக்களாகும். சந்திகளுக்கு இடையிலும் ஒவ்வோ ரெழுத்து நிற்கும்.

**அஷ்ட நாக பந்தம்** :—இஃது ஒரு சதுரத்தின் நான்கு பக்கத் தின் புறத்திலும் இவ்விரண்டு பாம்பின் றலைகள் பொருந்த நான்கு கோணங்களிலும் கோணம் ஒன்றில் இவ்விரண்டு வால்கள் பொருந்த எட்டுப் பாம்புகள் பின்னிக்கிடப்ப உபதேச முறைப்படி சித்திரம் வரைந்து, எடுத்துக்கொண்ட கணக் கின்படி எழுத்துக்கள் நிற்பக் கவிகள் அமைப்பதாகும். இதற்கு உதாரணமும் சித்திரமும் வந்துழிக் காண்க. (திருநாகைக் காரோ ணப் புராணம் நந்திநாதப்படலம் நோக்குக.)

## 7. வினுவுத்தரம்

பல மொழிகளாகப் பிரிந்து பொருள் படத்தக்க ஒரு சொல்லையோ சொற்றொடரையோ எடுத்துக்கொண்டு, அம்மொழிகளே விடைகளாமாறு வினுக்களை வினவி, அச்சொற்றொடரையுங் கூறி முடிப்பது வினுவுத்தரமாகும். இதற்கு உதாரணம்:—

1. "பூமகள்யார் போவானை யேவுவா னென்னுரைக்கும்
நாமம் பொருசரத்திற் கென்னென்பர்—தாமழகின்
பேரென் பிறைசூடும் பெம்மா னுவந்துறையுஞ்
சேர்வென் திருவேகம் பம்." (௧௦)

இதற்குப் பொருள்:—பூமகள் யார் - செந்தாமரைப் பூவில் உள்ளவளாகச் சொல்லப்படுபவள் யாவள்? போவானை - ஓரிடத்திற்குச் செல்லுபவனை, ஏவுவான் என் உரைக்கும் - அவனை ஏவல் கொள்வோன் என்னென்று கூறுவான்? பொரு சரத்திற்கு நாமம் என் என்பர் - போர் செய்யும் பாணத்திற்குப் பெயர் என்ன சொல்லுவார்? அழகின் பேர் என் - அழகினை உணர்த்தும் பெயர் யாது? பிறை சூடும் பெம்மான் - பிறைத் திங்களை முடியிற்சூடும் சிவபெருமான், உவந்து உறையும் சேர்வு என் - விரும்பி எழுந்தருளி யிருக்கும் தலம் யாது? திருவேகம்பம் - திருவேகம்பமாகும் (எ - று.) தாம் - அசை.

'பூமகள் யார்?' என்பதற்கு விடை, திரு. 'போவானை ஏவுவான் என்னுரைக்கும்?' என்பதற்கு விடை, ஏகு. 'நாமம் பொரு சரத்திற்கு என்னென்பர்?' என்பதற்கு விடை, அம்பு. 'அழகின் பேர் என்?' என்பதற்கு விடை, அம். 'பிறை சூடும் பெம்மான் உவந்துறையுஞ் சேர்வென்?' என்னும் வினுவிற்கு விடை, திருவேகம்பம்.

திரு+ஏகு+அம்பு+அம்=திருவேகம்பம்.

2. "நீத்தொழிந்த வாறைந் தடக்கிப்பின் னிச்சயமே
வாய்த்தமைந்த வாயில்பெண் ணேயே - கூர்த்தகு
வாளேறோ டோசை விளைநில மிவ்வல்லாற்
கேளா யுடன்வருவ தில்." (௧௧)

நீத்தொழிந்த ஆறு - நிலை; ஐந்தடக்கி - ஆமை; வாயில் - கடை; பெண்ணை - பிடி; வாளேறு - புண்; ஓசை - இயம்; விளை நிலம் - செய்; என்று பொருள் அமைந்து, 'நிலையாமை

கடைப்பிடி; புண்ணியஞ் செய்' என்று முடிந்து பொருள்படுவதும் இதன்பாற்படும். இவ்வறநெறிச்சாரச் செய்யுளில், 'கூர்த்தகு' என்ற தனிச்சொல் நிற்குமிடத்துக் 'கூத்தற்கு' என்று பாடங்கொண்டு, 'கூத்தற்கு வாளேறே டோசை விளைநிலம்' என்பதற்குச் 'சிவபுண்ணியஞ்செய்' என்று பொருள் கொண்டாருமுண்டு.

3. "நல்வினை நாற்கால் விலங்கு நவைசேரும்
கொல்வினை யஞ்சி குயக்கலம்—மெல்ல
வுறுதியு மல்லவு நாட்பேர் மரப்பேர்
இறுதியி லின்ப நெறி." (கஉ)

இந்த அறநெறிச்சாரச் செய்யுளும் இவ்வணியின்பாற்படும். நாற்கால் விலங்கு - முயல்; குயக்கலம் - அகல்; நாட்பேர் - (நாள் - நக்ஷத்திரம்) சோதி (சுவாதி); மரப்பேர் - தேறு (தேற்றுமரம்) எனக்கொண்டு, 'நல்வினை முயல்; நவைசேரும் கொல்வினையஞ்சி யகல்; மெல்லவுறுதியுமல்லவுஞ் சோதி; இறுதியிலின்ப நெறி தேறு,' என்று பொருள்படுவது காண்க.

---

## 8. காதை கரப்பு

யாதேனும் ஒரு செய்யுளுக்குரிய எழுத்துக்களெல்லாம் தேடி எடுக்கத் தக்கனவாக அமைய வேறோர் செய்யுளையியற்றி, அதன்கண் முதற்செய்யுளை மறைத்து வைப்பது காதை கரப்பாகும். காதை - கவி; கரப்பு - மறைத்தல்.

இதற்கு உதாரணம் :—

"அகலல்குற் றேரே யதர மமுதம்
பகர்தற் கரிதிடையும் பார்க்கின்—முகமதிய
முத்தென்ன லாமுறுவன் மாதர் முழுநீல
மைத்தடங்கண் வெவ்வேறு வாள்." (கங)

இச்செய்யுள், பாங்கற்குத் தலைவன் தலைவியின் இயல் கூறியது.

(கஈ) இதன் பொருள்:—நண்பனே! நான் கண்ட மாதர்தம் உருவின் தன்மையை யான் கூற நீ கேட்பாயாக; அகல் அல்குல் தேரே - அகன்ற அல்குற் பிரதேசமானது தேராகும்; அதரம் அமுதம் - வாயிதழ் அமுதமாகும்; இடையும் பகர்தற்கு

அரிது - இடையும் உவமை சொல்லுதற்கரியது; பார்க்கின் - ஆராய்ந்து பார்க்குமிடத்து, முகம் மதியம் - முகம் பூரண சந்திரனும்; முறுவல் முத்து என்னலாம் - புன்னகை முத்தென்று கூறலாம்; மாதர் முழு நீலம் மை தட கண் - விருப்பத்தை உண்டாக்கும் பெரிய நீல மலர் போலும் மையுண்ட விசாலமான கண்கள், வெவ்வேறு வாள் - தனித்தனி வாளாயுதங்களாகும் (எ - று.)

இச்செய்யுளில்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு." (கசு)

என்னும் குறளிலுள்ள எழுத்துக்களெல்லாம் ஆங்காங்கு வருமாறு அமைந்து அக்குறட்கவி மறைந்து கிடப்பதைக் காண்க.

---

## 9. கரந்துறைப் பாட்டு

ஒவ்வோரெழுத்து இடை விட்டுப் படிக்கும்போது வேறும் ஓர் செய்யுட்டோன்றும்படி எழுத்துக்கள் அமையச் செய்யுள் செய்வது கரந்துறைப் பாட்டாகும். கரந்துறைப்பாட்டு - கரந்துறைவதை உடைய பாட்டு.

"முதலொரு செய்யுண் முடித்தத னீற்றின்
பதமத னிறுதியிற் பயிலெழுத் துத்தொடுத்
திடையிடை யிட்டெதி ரேருய் முதலய
லடைதரப் பிறிதொரு செய்யுள் கரந்தங்
குறைவது கரந்துறைச் செய்யு ளாகும்

என்று மாறனலங்கார நூல் கூறும்.

இதற்கு உதாரணம்:—

"தாயே யெனையவி யவாவீ ருதிமன்ன
பின்னை வெருவா வருவதொ ரத்தப
வெம்புகல் வேறிருத்தி வைத்திசி னிச்சைகவர்
தாவா வருங்கல நீ யே." (கரு)

இதன் பொருள்:—தாயே - தாய் போன்றவனே! எனை அவி - எம்மை வருத்தும், அவா ஈருதி - ஆசையை ஒழிப்பாயாக; மன்ன - நாங்கள் நிலைபேறடையும்படி, பின்னை வெருவா

வருவது ஓர் - பின்பு நீ வரும் ஆற்றிடையுள்ள ஏதத்திற்கு அஞ்சாது வருவதனை ஆலோசித்துப் பார், அ தப - அவ்வபாய நிலை கெட, எம் புகல் வேறு இருத்தி வைத்திசின் - எமக்குப் பற்றுக்கோடாயுள்ள வேறோரிடத்தில் எம்மைச் சேர்த்தி வைப்பாயாக; இச்சை கவர் - எமது வேண்டுகோளை அங்கீகரித்துப் பூர்த்தி செய்வாயாக; தாவா அருங்கலம் நீயே - எமக்குக் கெடாத கிட்டுதற்கரிய ஆபரணம் போன்றவன் நீயேயாவாய் (எ - று.)

'என்' 'எம்' என்று வந்தது ஒருமை பன்மை மயக்கம். 'ஓர்' 'ஒர்' என நின்றது குறுக்கல் விகாரம். இது பாங்கி தலைவற்கு ஆற்றிடை வரும் ஏதங் கூறி வரைவு கடாயது. இச் செய்யுளில் ஈற்று மொழிக்கு முன்னெழுத்தாகிய லகாரம் மொழிக்கு முதலாகாமையின், அதனை விடுத்து அதற்கு முன்னுள்ள ககரத்தை முதலாகக்கொண்டு ஓரோரெழுத்து இடைவிட்டுத் தலை கீழாகப் படிக்கக் கிடைத்தது,

"கருவார் கச்சித்
திருவே கம்பத்
தொருவா வென்ன
மருவா வினையே." (கக)

என்னுந் தேவாரச் செய்யுள்.

---

## 10. சக்கிர பந்தம்

வண்டிச் சக்கிரம்போல அமைக்கப்பட்ட சித்திரத்திலே சிற்சில இடங்களில் எழுத்துக்கள் பொதுவாக நிற்கும்படி அமையப் பாடிய செய்யுள் சக்கிர பந்தமாம். சக்கிரம் - வண்டியின் உருளை; பந்தம் - கட்டு. இதன் இலக்கணம்,

"சக்கிரத் துட்டடு மாறுத ருனே
சக்கிர பந்த மெனச்சாற் றினரே."

என்னும் **மாறனலங்காரச்** சூத்திரத்தானறிக.

இச்சக்கிர பந்தம் பெரும்பாலும் நான்காரைச் சக்கிரம், ஆறாரைச் சக்கிரம், எட்டாரைச் சக்கிரம் என மூவகைப்படும். ஆரைக்கால் என்பன சக்கிரத்தின் குடத்திலிருந்து விளிம்பு வலயத்திற் சென்று பொருந்தும்படி தைத்திருக்கும் கட்டைகளாம்.

நான்காரைச் சக்கிர பந்தத்திற்கு உதாரணச் செய்யுள் :—

1. "மேரு சாபமு மேவுமே
மேவு மேயுண வாலமே
மேல வாமவ ளுயமே
மேய ளுனடி சாருமே." (கள)




நான்காரைச் சக்கிர பந்தம்—I

இதனை நான்காரைச் சக்கிர பந்தத்திலே முறையே அமைக்குங்கால் இச்செய்யுளிலுள்ள முப்பத்திரண்டு எழுத்துக்களும் பதினேழாகச் சுருங்கும்.

நடுக் குறட்டினின்ற 'மே' என்னும் எழுத்து, எட்டு முறை வாசிக்கப்பட்டு எட்டெழுத்தாகும்; ஆரையில் நின்ற எட்டெழுத்துக்களும் இரு முறை வாசிக்கப்பட்டுப் பதினறெழுத்துக்களாம். இவை நீங்கச் சுற்று வட்டத்திலுள்ள எழுத்துக்கள் எட்டு ஆக எழுத்துக்கள் முப்பத்திரண்டும் பதினேழாக அடங்கும்.

இச்செய்யுளின் பொருள் :—மேரு சாபமும் மேவுமே - மேரு மலையும் (சிவபெருமானுக்கு) வில்லாகப் பொருந்தும்; மேவுமே உணவு ஆலமே - (அவனுக்கு) விடம் உணவாக அமையும்; அவன் ஆயமே மேலவாம் - அவன் பரிவாரமாகிய பூத கணங்கள் மேன்மை வாய்ந்தனவாம்; மேய் அனன் அடி சாருமே விரும்பி அப்பெருமானது பாதங்களைப் பற்றுக்கோடாகச் சேருங்கள் (எ - று.)

2. *“ காதலீ தேவ கலவ மயிலேயென்
மாதராய் மாலா லதிமோக னேனினே
காவாத போழ்தின்மாக் காமனும் வன்னெஞ்ச
னேவா வனேகமல ரெய்ம்.” (கஅ)



நான்காரைச் சக்கிர பந்தம்—II

இச்செய்யுளைச் சித்திரத்தி லமைக்குங்கால் சக்கிரத்தின் குறட்டில் ‘ கலாவதி ’ என்னும் நாடக நாயகியின் பெயர் போதருதலைக் காண்க.

இக்கவியின் பொருள் :—காதலீ - அன்புடையவளே ! தேவ கலவ மயிலே - தெய்வத் தன்மை வாய்ந்த கலாபத்தை உடைய மயிலனைய சாயலை உடையாய் ! என் மாதராய் - எனது விருப்பத்திற்கிடமானவளே ! மாலால் - உன்மீதுள்ள ஆசை மயக்கத்தால், அதி மோகனேன் - மிக்க மோகத்தை உடையனுயினேன் ; இனே - (இன்னே) இப்பொழுதே, காவாத போழ்தின் - என்னை அருள் புரிந்து காவாது கைவிடும் பொழுது, மா காமன் ஆம் வன்மை நெஞ்சன் - பெருமையுடைய மன்மதனுகிய கொடிய நெஞ்சத்தை உடையவன், அனேக மலர் ஏவா எய்ம் - பல புஷ்பங்களைப் பாணமாக என்மீது செலுத்துவான் (எ - று.)

இனே ‘ இன்னே ’ என்பதன் தொகுத்தல் விகாரம். ‘ எய்யும் ’ எனற்பாலது ‘ எய்ம் ’ என்றாயது, “ செய்யுமெ

* கலாவதி நாடகத்தின் 90-ஆம் பக்கம், 124-ஆம் செய்யுள்.

னெச்சவீற் றுயிர்மெய்'' என்ற நன்னூற் சூத்திர விதியா னென்க.

3. "மாதவா போதி வரதா வருளமலா
பாதமே யோது சுரரை நீ—தீதொழிய
மாயா நெறியளிப்பா யின்றன் பகலாச்சீர்த்
தாயே யலகில்லா யாம்.'' (கக)

இச்செய்யுளும் நான்காரைச் சக்கிரத்துள் ஆரையின் மேல் நந்நான்கெழுத்து நிற்பச் சுற்று வட்டத்தில் இருபத் தெட்டெழுத்துப் பொருந்தக் குறட்டில் 'வசுதாரை' என்னும் பெயர் தோன்ற அமைவது காண்க.



நான்காரைச் சக்கிர பந்தம்—III

இக்கவியின் பொருள் :—அலகு இல் ஆய் ஆம் மாதவா - அளவில்லாத வலிமை பொருந்திய பெரிய தவத்தையுடையோய்! போதி வரதா - மகா போதி (அரச மரம்) விருக்ஷத்தி னடியில் எழுந்தருளிய வரதனே! பாதமே ஓது சுரரை நீ தீது ஒழிய மாயா நெறி அளிப்பாய் - உனது இணையடிகளைத் தோத்திரஞ் செய்யும் சுரர்களுக்கு அன்னோர்தம் தீமை கெட அருளி அழி வில்லாத மோக்ஷ பதவியைக் கொடுப்பாய்; இன்று - இப் பொழுது, அன்பு அகலாச் சீர்த்தாயே - தனது குழந்தைகள் மாட்டு அன்பு நீங்காத சிறப்பினையுடைய தாய் போன்றவனே! (எமக்கும் அருள் செய்வாயாக) (எ - று.)

மாயா நெறி - வீடு; "சிறுகா லையிலா நிலையோ திரியா குறுகா நெடுகா குணம்வே றுபடா, மறுகாநெறி" (கம்ப - ரா.)



ஆரூரைச் சக்கிர பந்தம்

என்றது போல. 'அலகில் ஆய் ஆம் மாதவா' என விற்பூட்டாகப் பொருள் கொள்க. 'எமக்கும் அருள் செய்' என்பது இசையெச்சம்.

ஆரூரைச் சக்கிர பந்தத்திற்கு உதாரணம் :—

"தண்மலர் வில்லிதன் போரரா
 னமக்குத் தயையளித்த
கண்மலர்க் காவிக் கெதிரா
 வனவன்று கைப்பொலிந்த
பண்மலர் யாழ்பயில் வாரார்வு
 சேர்பதி நாகைமிக்க
தண்மை யகத்துப் பதுமத்த
 மாதர் தடங்கண்களே." (௨0)

இதன் பொருள் :—மிக்க தண்மை அகத்து பதுமத்த மாதர் தட கண்கள் - மிகுந்த குளிர்ச்சி வாய்ந்த அகவிதழ்களை யுடைய தாமரை மலர்களில் வீற்றிருக்கும் திருமகள் கலைமக

ளாகிய மாதர்களின் விசாலமான கண்களும், தண்மை மலர் வில்விதன் போரான் நமக்கு தயை அளித்த - குளிர்ந்த காம காண்டமென்னும் மலரையே வில்லாகக்கொண்ட மன்மதன் செய்த போரினிடத்து நமக்கு அருள் புரிந்த, கண் மலர் காவிக்கு எதிரானவன அன்று - கண்களாகிய நீலோற்பல மலர்களுக்குச் சமானமாவனவல்ல; கை பொலிந்த பண் மலர் யாழ் பயில்வார் ஆர்வு சேர் பதி நாகை - கையிடத்து விளங்கும் இன்னிசையைத் தரும் யாழினைப் பயிலும் அப்பெண்ணின் உறைவிடம் பொருந்திய நகரம் நாகபட்டினமாம் (எ - று.) தடங்கண்கள் - ஒற்றளபெடை.

போரான் - போரில்; வேற்றுமை மயக்கம். மலர் வில்லி - மன்மதன்; மன்மதனுக்குக் கரும்பு வில்லோடு காம காண்டம் என்னும் மலரும் வில்லாம்; 'புஷ்பதந்வா' என்ற பெயரும் இதனை வலியுறுத்தும். ஒப்: "நீறுபடு துட்டமதன் வேறுரு வெடுத்தலரி னீள்சிலை குனித்து" (மதுரைக் கலம்பகம்). ஆர்வு, 'ஆர்வம்' என்பதன் விகாரமெனினுமாம்; ஆர்வம் - அன்பு. இது பாங்கற்குத் தலைவன் தலைவியின் இயலிடங் கூறியது.

இச்செய்யுள், ஆறாரைச் சக்கிரத்திலமையும்போது, நடுவே 'ரா' என்னும் எழுத்து நிற்ப, ஆர்மேல் ஒன்பதொன்பது எழுத்தாய்க் குறட்டின்மேற் 'போதி வானவர்' என்னும் பெயர் தோன்றச் சுற்று வட்டத்தில் இருபத்து நான்கு எழுத்து நின்று முற்றுப் பெற்றது.

இனி, எட்டாரைச் சக்கிரத்திற்கு உதாரணம்:—

"மலர்மலி சோலை யகனலங் கதிர்க்க
மடமயி லியற்றக மாதிரம் புதைத்து
வளைந்துபுகன் மேக வல்லிருண் மூழ்க
வரியளி துதைந்த கதுப்பினி தடைச்சி
மன்னுமா மடமொழி வடிவாள் வளவன்
கன்னித் துறைவன் கனகச் சிலம்பே." (உகூ)

இச்செய்யுள், பாங்கற்குத் தலைவன் தலைவியது இயலிடங் கூறல் என்னுந் துறைத்தாம்.

இதன் பொருள்:—மா மடமொழி - பெருமை வாய்ந்த மடப்பத்தை உடைய மொழியினையுடையாள், மலர் மலி சோலை - பூக்கள் நிறைந்த சோலையின், அகல் நலம் கதிர்க்க - மிகுந்த

அழகு விளங்க, மட மயில் இயல் தக - மடப்பம் மிக்க மயிலின் இயல்பு பொருந்த, மாதிரம் புதைத்து வளைந்து புகல் மேகம் வன்மை இருள் மூழ்க - திக்குக்களிற் பொதிந்து மூடிப் புகுதலை யுடைய மேகத்தின் மிகுந்த இருள் தன்னிடத்துப் படிய, வரி அளி துதைந்த கதுப்பு இனிது அடைச்சி - இரேகைகளையுடைய வண்டினங்கள் நெருங்கிய கூந்தலைச் செவ்விதாக அலங்கரித்து,



எட்டாரைச் சக்கிர பந்தம்

வடி வாள் வளவன் - வடித்துக் கூர்மையாக்கிய வாளினை யுடைய சோழனாகிய, கன்னி துறைவன் - கன்னியாகுமரி நீர்த் துறையினையுடைய மன்னனது, கனகம் சிலம்பே மன்னும் - பொன்மயமாகிய மலையினிடத்துப் பொருந்தி நிற்பள் (எ - று.)

வரியளி - வரிப்பாட்டினையுடைய வண்டுமாம். மலர் மலி சோலையின் அழகும், மடமயிற்றோகையின் வனப்பும், மேகத்தின் இருட்சியும் பொருந்தக் கூந்தலைப் புனைந்து தலைவி கனகச் சிலம்பில் மன்னுவள் என்க.

இக்கவி, எட்டாரைச் சக்கிரத்தில் அமையும்போது, நடுவில் 'க' என்னும் எழுத்து நிற்கக் குறட்டில் 'அறமே தனமாவது' என்னுந் தொடர் புலப்பட, ஒவ்வோர் ஆரின் மேலும் அவ்வாறு எழுத்துப் பொருந்தச் சுற்று வட்டச் சூட்டில் முப்பத்திரண்டு எழுத்துக்கள் கிடப்பது காண்க.

# 11. சுழி குளம்

சுழிகுளமாவது, எவ்வெட்டெழுத்துக் கொண்ட நான்கடிச் செய்யுளாய், மேனின்று கீழிழிந்தும் கீழ் நின்று மேலேறியும் புறஞ்சென்றுண்முடியப் படிக்கத் தக்கதாகப் பாடப்படுவது.

"தெழித்தெழு நீர்குளத் தினுட்செறிந் ததைக்கொடு
சுழித்தடங் குவபோன் றடங்குதல் சுழிகுளம்."

"ஆரவாரித்து எழாநின்ற புனல் குளத்தினுள் தனதிடத் தடைந்தது யாதொன்று, அதனைக் கைக்கொண்டு சுற்றி




சுழி குளம்-I

உள்ளே அடங்குவது போலச் சுற்றிப் பாவினகத்துப் பொருளைக் கொண்டடங்குதல் சுழி குளமாம்," (எ - று).

என்ற **மாறனலங்காரச்** சூத்திரத்தானும் அதனுரையானும் சுழி குளத்தின் இலக்கணம் விளங்கும்.

இதற்கு உதாரணம்:—

1. " கவிமுதி யார்பாவே
விலையரு மாநற்பா
முயல்வ துறுநர்
திருவழிந்து மாயா." (உஉ)

இச்செய்யுளின் பொருள்:—கவி முதியார் பாவே - செய்யுளியற்றுவதில் முதிர்ச்சியடைந்தவர் பாடல்களே, விலை அருமை மா நன்மை பா - விலை மதித்தற்கரிய பெருமை வாய்ந்த நல்ல பாடல்களாம்; முயல்வது உறுநர் - முயற்சி செய்வதில் நன்கு பொருந்தினவர்தம், திரு அழிந்து மாயா - செல்வம் சிதைந்து தொலையா (எ - று.)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ம | த | ந | வி | ரா | கா | வா | மா |
| த | ந | த | ச | கா | வே | நீ | வா |
| ந | த | த | ந | தா | தா | வே | கா |
| வி | ச | ந | வி | ரோ | தா | கா | ரா |

சுழி குளம்-II

2. " மதந விராகா வாமா
தநத சகாவேநீவா

நததந தாதா வேகா
விசந விரோதா காரா." (உக)

இதன் பொருள் :—மதந விராகா - மன்மதன்மீது விருப்ப மில்லாதவனே! வாமா - ஒளியை யுடையவனே! தநத சகாவே - குபேரனுக்குத் தோழனே! நத் அதந தாதா - மேகத்தினும் அதிகமான கொடையாளியே! விசந விரோத ஆகாரா - துக்கத்தைச் செய்யும் விரோதமான விஷமாகிய உணவினை உடையவனே! நீ வா கா - நீ பிரத்தியக்ஷமாகத் தரிசனந் தந்து எம்மைக் காப்பாற்றுவாயாக (எ - று.)

'விசன விரோத ஆகாரா - விசனத்திற்கு விரோதமான (அதாவது விசனத்தைப் போக்கும்) ஸ்வரூபத்தை உடையவனே!' என்று பொருள் கூறுவாருமுளர்.

---

## 12. சருப்பதோபத்திரம்

சருப்பதோபத்திரம் என்பது, நான்கு புறத்தும் வாயில்களையுடையதாய், நினைத்த வழியாற் செல்லத்தக்கதாய்ச் சமைக்கப்படும் ஒரு வகை வீடு. அது போல எப்பக்கத்திலே தொடங்கிப் படித்தாலும் அச்செய்யுளேயாகும்படி எவ்வெட்டெழுத்துடைய நான்கடிகளுடையதாய் அறுபத்து நான்கு அறைகளிலேமுதலறை தொடங்கி ஒரு முறையும் இறுதியறை தொடங்கி ஒரு முறையுமாக இரு முறை எழுதி இயையுமாறு பாடப்படுஞ் செய்யுள் சருப்பதோபத்திரம் என்னப்படும்.

'ஸர்வதோபத்ரம்' என்பது சருப்பதோபத்திரம் எனத் தற்பவமாய் நின்றது. ஸர்வதஸ் - எப்பக்கத்தும்; பத்ரம் - வாயில்; என்பது அவயவப் பொருள்.

இதனிலக்கணத்தை,

"இருதிறத் தெழுதலு மெண்ணான் கெழுத்துடை
யொருசெய்யு ளெண்ணெண் ணரங்கினு ளொருங்கமைந்
தீரிரு முகத்தினு மாலை மாற்றாய்ச்
சார்தரு மாறியுஞ் சருப்பதோ பத்திரம்.

என்னும் மாறனலங்காரச் சூத்திரத்தானுணர்க.

இச்செய்யுட்குதாரணம் :—

" மாவா நீதா | தா நீ வாமா
வாயா வாமே | மேவா யாவா
நீவா ராமா | மாரா வா நீ
தாமே மாரா | ராமா மேதா." (உச)

இதன் பொருள் :—மாவா - பெருமையை உடையவனே - நீதா - நீதியையுடையவனே ! தா நீவா மாவா - வலிமை நீங்காத




செல்வமுடையவனே ! யாவாமே மேவா யாவா (மே வாயாவா யா ஆமே) - சேரக்கடவாய் வ்யாதனவாக எவைதாமாகும் ? நீ வா !

நீ வருதி ; ராமா மாரா - இராமனை யொப்பவனே! மன்மதனை யொப்பவனே! ஆ - காமதேனுவை யொப்பவனே! (அன்றி இடபம் போன்றவனே!) ஆமா - ஒழுங்குடையவனே! மேதா - நல்லுணர்வுடையவனே! மே மார் ஆர் - மேன்மை பொருந்திய நின் மார்பிலுள்ள ஆத்தி மாலையை, நீ தா - நீ தருதி (எ - று.)

ஆமன் - ஒழுங்குடையவன். மேதன் - அறிவுடையவன். நீதன் - நீதியையுடையவன்: தா - வலிமை. மார் - 'மார்பு' என்பதன் கடைக்குறை விகாரம்.

இக்கவி, ஸர்வதோபத்ர சித்திரத்தில் எட்டு வழியாகப் படிக்கத் தக்கதாய் எழுத்துக்கள் அமைந்து நிற்கும். நந்நான்கு வரிகளாக முதலறை தொடங்கி வலப்பக்கமாக வாசித்தும், வாசித்தவாறே இறுதியினின்று முதல் வர வாசித்தும், முதலறையினின்று கீழ்ழிய வாசித்தும், வாசித்தவாறே மேலேற வாசித்தும், முதல் வரியினிறுதியினின்று கீழ்ழிய வாசித்தும், வாசித்தவாறே மேலேற வாசித்தும், இறுதி வரியின் முதல் தொடங்கி இடப்பக்கமாக வாசித்தும் முடித்து நோக்குக.

---

## 13. அக்கரச் சுதகம்

முழுவதும் நின்று ஒரு பொருள் பயப்பதாயும், ஒவ்வோரெழுத்தாக நீக்க வெவ்வேறு மொழியாய் வெவ்வேறு பொருள் பயப்பதாயுமுள்ள ஒரு சொல்லை எடுத்துக்கொண்டு பொருள்கள் காட்டிப் பாடப்படுவது அக்கரச் சுதகமாகும். அக்கரம் எழுத்து ; சுதகம் - குறைத்தல்.

இதற்கு உதாரணம் :—

"பொற்றூணில் வந்தசுடர் பொய்கை பயந்த வண்ணல்
சிற்றாயன் முன்வனிதை யாகி யளித்த செம்மல்
மற்றியார்கொ லென்னின் மலர்தூவி வணங்கி நாளுங்
கற்றோர் பரவுங் கநகாரி நகாரி காரி." (உரு)

இதன் பொருள் :—பொன் தூணில் வந்த சுடர் - பொன்மயமாகிய தூணிலே பிறந்த சோதிஸ்வரூபி, பொய்கை பயந்த அண்ணல் - (சரவணப்) பொய்கை பெற்ற பெருமையுடையவன், சிறுமை ஆயன் முன் வனிதை ஆகி அளித்த செம்மல் - சிறிய இடையனாகிய கண்ணன் முற்காலத்தில் மோகினிப் பெண்ணாகிப் பெற்றெடுத்த கடவுள், யார் கொல் என்னின் (இவர்

கள்) யாவரென்று வினவின், மலர் தூவி வணங்கி - மலர்களால் அர்ச்சித்து நமஸ்கரித்து, கற்றோர் நாளும் பரவும் - கற்றவர்கள் தினமும் தோத்திரஞ் செய்யும், கநக அரி - கநகனாகிய இரணியனைக் கொன்ற திருமால்; நக அரி - கிரௌஞ்ச மலையை அழித்த முருகவேள்; காரி - மகாசாஸ்தாவாகிய ஐயனார் (எ - று.)

இச்செய்யுளில், கநகாரி, நகாரி, காரி என்ற பெயர்கள், எழுத்துக்கள் ஒவ்வொன்று குறையப் பொருள் வேறுபட்டு நிற்ப, அப்பொருள்கள் இன்னவென்று விளங்கிக் கிடந்தவாறு காண்க.

---

## 14. நிரோட்டம்

நிரோட்டமாவது, இதழ் முயற்சியாற் பிறப்பனவாகிய உ, ஊ, ஒ, ஓ, ஔ, ப, ம, வ என்னும் எழுத்துக்கள் வாராமற் பாடப்படுஞ் செய்யுளாம்.

நிரோட்யம் என்பது நிரோட்டம் என நின்றது. நிர் இன்மை; ஓட்டியம் - ஓட்ட சம்பந்தமுடையது. ஓட்டம் - உதடு.

இதனிலக்கணத்தை, "உ, ஊ, ஒ, ஓ, ஔ, ப, ம, வ விவற்றியைபு, சேரா நிரோட்டத் திறத்து," என்னுஞ் சூத்திரத்தானுணர்க.

இதற்கு உதாரணம் :—

1. "சீலத்தான் ஞானத்தாற் றேற்றத்தாற் சென்றகன்ற
காலத்தா லாராத காதலான் - ஞாலத்தார்
இச்சிக்கச் சாலச் சிறந்தடி யேற்கினிதாங்
கச்சிக்கச் சாலைக் கனி." (உகூ)

இதன் பொருள் :—சீலத்தான் - ஒழுக்கத்தோடும், ஞானத்தான் - ஞானத்தோடும், தேற்றத்தான் - மனத் தெளிவாகிய சித்த சுத்தியோடும், சென்று அகன்ற காலத்தான் - மிக நீண்ட காலத்தோடும், ஆராத காதலான் - அடக்க அமையாத பக்தியோடும், ஞாலத்தார் - இவ்வுலகிலுள்ளார், இச்சிக்க - விரும்பி வணங்கவும், சால சிறந்து - மனம் வாக்குக்களுக்கெட்டாமல் மிகவும் பெரிதாய் விளங்கி, அடியேற்கு இனிதாம் - எளியேனாகிய எனக்குப் பேரானந்தமளிப்பதாகும், கச்சி கச்சாலை கனி காஞ்சீபுரத்தில் திருக்கச்சாலை என்னுங் கோயிலிலெழுந்தருளியிருக்கும் கனி போன்ற கடவுளாகிய சிவபெருமான் (எ - று.)

'ஒழுக்க ஞான சித்த சுத்திகளோடு நீண்ட காலம் ஆரா அன்பு செய்த ஞாலத்தார்க்கு எட்டாது பெரிதுஞ் சிறந்திருந் தும், அடியேனுக்கு எளிதாய் இன்பம் பயப்பது கச்சாலைக்கனி' என்க.

2. "செய்யா யினியநலஞ் சேரரசர் சீராளா
கையா லெனைத்தழீஇக் காதலியே யென்றழைத்த
லையா தகையேய்ந் தழகார்ந்தா யென்றைக்கே
நையாநிற் கின்றே னனி." (உஎ)

என்ற * கலாவதி நாடகச் செய்யுளும் நிரோட்டகமாமாறு காண்க.

[நலம் - அழகு, நன்மை. சீராளன் - சிறப்பினை ஆள்பவன், மேலோன். தழீஇ - தழுவி. தகை - பெருந்தன்மை. ஏய்ந்து - பொருந்தி. அழகு ஆர்ந்தாய் - அழகு நிறைந்தவனே! நனி - பெரிதும். 'அழைத்தல் என்றைக்கு', 'நனி நையா நிற்கின் றேன்' என்று கூட்டுக.]

---

## 15. ஒற்றுப் பெயர்த்தல்

ஒரு மொழியுந் தொடர் மொழியுமாய் நின்று, கருதிய பொரு ளன்றி வேறு பொருளும் பயக்கத் தக்கதாகப் பாடப்படுவது ஒற்றுப் பெயர்த்தலாகும்.

இதற்குதாரணச் செய்யுள் :—

1. "வண்புயலைக் கீழ்ப்படுத்து வானத் தருமலைந்து
மண்குளிரச் சாயல் வளர்க்குமாந்—தண்கவிகைக்
கொங்கா ரலங்கலந பாயன் குளிர்பொழில்சூழ்
கங்கா புரமாளி கை." (உஅ)

இதன் பொருள் :—வண்மை புயலை கீழ் படுத்து - வளப்பம் பொருந்திய மேக மண்டலத்தைக் கீழாக்கி மேலோங்கி, வானம் தரு மலைந்து - விண்ணுலகத்துள்ள கற்பக மலர்களை உச்சிமீது சூடி, மண் குளிர - மண்ணுலகம் குளிர்ச்சியடைய, சாயல் வளர்க்கும் ஆம் - தன் உருவச் சாயையாகிய நிழலைப் பெருக்கும், தண்மை கவிகை கொங்கு ஆர் அலங்கல் அநபாயன் - குளிர்ச்சி பொருந்திய குடையினையும் மது நிறைந்த மலர் மாலையினையு முடைய அநபாய சோழனது, குளிர் பொழில் சூழ் கங்கா புரம்

* கலாவதி நாடகம் பக்கம், 87; பாட்டு, 144.

மாளிகை - கங்கை கொண்ட சோழ புரத்திலுள்ள குளிர்ந்த சோலை சூழ்ந்த அரண்மனை (எ - று.)

மற்றொரு பொருள் :—வண்மை புயலை கீழ் படுத்து - வளவிய மேகத்தைப் பழிக்குந் தன்மையதாய், வானம் தரு மலைந்து - சுவர்க்கத்துள்ள கற்பக விருக்ஷங்களோடு (கொடைத் தொழிலில்) மாறுகொண்டு, மண் குளிர சாயல் வளர்க்கும் - மண்ணுலகிலுள்ளார் களிப்படைய மென்மைத் தன்மையைப் பெரிதும் உடையதாகும், தண்மை கவிகை கொங்கு ஆர் அலங்கல் அநபாயன் - குளிர்ந்த குடையையும் மணம் நிறைந்த ஆத்தி மலர் மாலையையும் உடைய அநபாய சோழனாகிய, கங்காபுரம் ஆளி கை - கங்கை கொண்ட சோழ புரத்தை ஆளும் மன்னவனது கை (எ - று.)

மேற்செய்யுளில், 'கங்காபுரமாளிகை' என்பது கங்காபுரத்திலுள்ள மாளிகை எனவும், கங்காபுரத்தினை ஆள்பவனுடைய கை எனவும் மகர ஒற்றுப் பெயர்ந்து ஒற்றுப் பெயர்த்தலாயிற்று. 'அலங்கற் குலதீபன் கொய்பொழில் சூழ்' என்பதும் பாடம்.

2. "பொற்புடைய மாதர் புலவாரோ பொய்ம்மருவாச்
சொற்பயிலும் பாண சுடர்மணித்தேர்—கற்புடைய
வஞ்சிநகர் சேரினற மாமருதா ரான்மகிழா
நஞ்சனைய நல்வய லூ ரற்கு." (உக)

இதன் பொருள் :—பொய் மருவா சொல் பயிலும் பாண - பொய்யோடு கூடாத சொற்களைப் பலகாலும் சொல்லாநின்ற பாணனே! சுடர் மணி தேர் - தலைவனது பிரகாசமானமணிகள் கட்டிய தேர், கற்பு உடைய வஞ்சி நகர் சேரின் அறமா - கற்பினையுடைய தலைவியின் அரண்மனையை அடைந்தால் அது தருமமாகுமா? (ஏனெனில்), பொற்பு உடைய மாதர் புலவாரோ - அழகினையுடைய பரத்தையர் ஊடுதலைச் செய்யாரோ? மருதாரான் மகிழா நஞ்சு அனையம் நன்மை வயல் ஊரற்கு - மணம் பொருந்திய மாலையையும் நல்ல வயல்களையுடைய ஊரினையுமுடையானாகிய தலைவனுக்குக் களிப்பினைத் தராத விடம் போன்றுள்ளோம் அல்லேமோ யாங்கள்? (எ - று.)

இச்செய்யுளின் மூன்றாமடியில், வஞ்சி, நகர், சேர், இல், நற, மா, மருது, ஆர், ஆல், மகிழ் என்னும் பத்து மரப் பெயர்கள் ஒற்றுப் பெயர்ந்து வந்தன. 'நறா' நறவென நின்றது

'குறியதன் கீழாக்குறுகலும்' என்ற விதியானமைந்தது. இச் செய்யுள் ஒற்றுப் பெயர்த்தலாக அமைந்ததும் பின் வரும் வெண் பாவானுணர்க:—

"ஓரடியுட் பத்து மரமுடனொற் றுப்பெயர்த்துத்
தேர்மருவி யூடற் றிறம்புனைந்து — நீர்மை
மருதம் புணர்ந்ததுவும் வெண்பாவாய் வையம்
கருதப் பகர்வான் கவி."

---

## 16. மாத்திரைச் சுருக்கம்

யாதேனும் ஒரு பொருள் பயக்கும் ஒரு சொல்லின்கணுள்ள எழுத்தின் மாத்திரையைச் சுருக்குதலால் அச்சொல் வேறு சொல்லாகி வேறு பொருள் பயக்கும்படி பாடப்படுவது மாத்திரைச் சுருக்கமாகும்.

இதற்கு உதாரணம்:—

"நேரிழையார் கூந்தலினோர் புள்ளிபெற நீண்மரமாம்
நீர்நிலையோர் புள்ளி பெறநெருப்பாம்-சீரளவுங்
காட்டொன் றொழிப்ப விசையா மதனளவு
மீட்டொன் றொழிப்ப மிடறு." (௩௦)

இதன் பொருள்:—நேரிழையார் கூந்தலின் ஓர் புள்ளி பெற - மாதர் கூந்தலில் ஒரு புள்ளி வைக்க, நீள் மரமாம் - ஒரு நீண்ட மரமாகும்; நீர் நிலை ஓர் புள்ளி பெற நெருப்பாம் - நீர் நிலையில் ஒரு புள்ளி வைக்க நெருப்பாகும்; சீர் அளவும்-சிறப்புப் பொருந்திய, காட்டு ஒன்று ஒழிப்ப இசையாம் - காட்டில் ஒரு மாத்திரை குறைப்ப இசைப்பாட்டாகும்; அதன் அளவு மீட்டு ஒன்று ஒழிப்ப மிடறு - அவ்விசைப் பாட்டின் மாத்திரையின் மீளவும் ஒரு மாத்திரை குறைப்பக் கழுத்தாகும் (எ-று.)

நேரிழையார் கூந்தல் - 'ஓதி.' இதன்கணுள்ள நெட்டெழுத்தாகிய 'ஓ' வின்மேற் புள்ளி வைக்க ஒரு மாத்திரை குறைந்து குற்றெழுத்தாகிய 'ஒ'கரமாய், 'ஒதி' என்றாகி, ஒரு மரத்தின் பெயராகும்.

நீர் நிலை - 'ஏரி' 'ஏ'காரத்தின்மேற் புள்ளி வைக்க, 'எரி' என்றாகும். எரி - நெருப்பு.

காடு - 'காந்தாரம்'. ஒரு மாத்திரை குறையக் 'கந்தாரம்' என்றாகி, இசைப்பாட்டினை உணர்த்திற்று. இச்சொல் பின்னும் ஒரு மாத்திரை சுருங்கக் 'கந்தரம்' என்றாகி, 'மிடறு' என்று பொருள்படும்.

எகரவொகரங்களுக்குப் புள்ளி வைத்தெழுதுங் காலத்தில் இச்செய்யுளியற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்பது அறிக.

---

## 17. மாத்திரை வருத்தனம்

யாதேனும் ஒரு பொருள் பயக்கும் ஒரு சொல்லின்கணுள்ள எழுத்திற்கு மாத்திரையைக் கூட்டுதலால் வேறொரு சொல்லாகி வேறு பொருள் பயக்கும்படி பாடப்படுவது மாத்திரை வருத்தனமாகும். வர்த்தநம் - அதிகப்படல்.

இதற்கு உதாரணம்:—

"அளபொன் றேறிய வண்டதி ரார்ப்பினால்
அளபொன் றேறிய மண்ணதிர்ந் துக்குமால்
அளபொன் றேறிய பாட லருஞ்சுனை
அளபொன் றேறழ கூடலைந் தாடுமால்." (௯௧)

இச்செய்யுளின் பொருள்:—அளபு ஒன்று ஏறிய வண்டு அதிர் ஆர்ப்பினால் - மாத்திரையொன்று கூடிய வண்டின் அதிர்ச்சி பொருந்திய ஆரவாரத்தினால், அளபு ஒன்று ஏறிய மண் அதிர்ந்து உக்கும் ஆல் - மாத்திரையொன்று கூடிய மண் அதிர்ச்சியுற்றுச் சொரியும் (ஆல் - அசை); அளபு ஒன்று ஏறிய பாடல் - மாத்திரையொன்று கூடிய பாடல், அருமை சுனை - காணுதற்கு அருமையான இனிய சுனையிடத்து, அளபு ஒன்று ஏறு அழகு ஊடு அலைந்து ஆடும் ஆல் - மாத்திரையொன்று கூடிய அழகினிடத்து அலைவுற்று அசையும்; (ஆல் - அசை) (எ - று).

வண்டு - அளி; அளபு ஒன்று ஏறினால் 'ஆளி' என்றாகும். மண் - தரை; அளபு ஒன்றேறினால் 'தாரை' என்றாம். ஆளியின் ஆரவாரத்தால் மேகங்கள் அதிர்ச்சியுற்று மழையைச் சொரியுமென்றவாறு.

பாடல் - கவி. அளபு ஒன்று ஏறிய பாடல் 'காவி'யாகும். அழகு - வனப்பு. அளவு ஒன்று ஏறிய அழகு 'வானப்பு' ஆகும். வான் அப்பு - ஆகாய கங்கா ஜலம். அருஞ்சுனையிடத்

துக் காவி மலர்கள் ஆகாய கங்கை நீரிலும் அசைந்து ஆடும் என்றதாம். இச்செய்யுள் தொடர்புயர்வு நவிற்சியணியமைந்து மலையின் உயர்ச்சி விளக்கியவாறு காண்க.

---

## 18. முரச பந்தம்

முரச பந்தமாவது, நான்கடிகளையுடையதாய் மேலிரண்டடியும் தம்முட் கோமூத்திரியாகவும், கீழிரண்டடியுந் தம்முட்



கோமூத்திரியாகவும் சிறு வார் போக்கி, முதலடி முதல் தொடங்கி இரண்டாமடியினும் மூன்றாமடியினும் நான்காமடியினுங் கீழ்ற்று

மீண்டு மேலேபோய்க் கீழேயிறங்கி முடியவும், இவ்வாறே இறுதி யடி முதல் தொடங்கி மேலே போய்க் கீழேயிறங்கி மேலே போய் முடியவும் தக்கதாகப் பெருவார் போக்கி எழுத்துக்களமையப் பாடப்படுவதாகும். முரசம் - மிருதங்க வாத்தியம்.

இதற்கு உதாரணம்:—

"கான வாரண மரிய வாயினனே
தான வாரண மரிய வாயினனே
மான வாரண மரிய வாயினனே
கான வாரண மரிய வாயினனே." (௬௨)

இச்செய்யுளின் பொருள்:—

இனன் மான வாரணம் அரிய வாயினன் - சூரிய குலத் தவனாகிய சோழன் வலிய போர் புரிந்து தடுத்தலைப் பொருந்திய இடங்களை உடையவனாகிய பகையரசன், கானம் ஆரணம் அரியவாய் - இசையினையுடைய வேத முழக்கங்களு மில்லாதன வாய், இனன் ஏ தான வாரணம் அரியவாய் - கூட்டமாகப் பொருந்திய மதயானைகளின் முழக்கங்களுமில்லாதனவாய், கனா வாரணம் அரிய வாயினன் - காட்டுக்கோழி சிங்கம் என்பவற் றின் ஒலிகளையுடைய இடங்களுடையவனாயினன் (எ-று.)

இனன் - சூரியன், சோழன், அரசன். வாரணம் - தடை, யானை, கோழி. வாய் - இடம்.

இச்செய்யுளை முரச பந்த அறையினுள்ளே அமைத்து எழுத்துக்கள் பொதுவாக நிற்குமாறும் அடிகள் கோமூத்திரி யாகுமாறும் மேலுங் கீழுஞ் செல்லுமாறும் பிறவும் காண்க. முரசத்தில் வேறொருவாறு வார் போக்கி எழுத்தமைப்பதை **மாறனலங்காரத்திற்** காண்க.

---

## 19. திரிபாகி

மூன்றெழுத்துக்களைச் சேர்க்க ஒரு மொழியாகியும், அதன் கண் உள்ள முதலெழுத்தையும் இறுதியெழுத்தையும் சேர்க்க மற்றொரு மொழியாகியும், இடையெழுத்தையும் கடையெழுத் தையும் சேர்க்கப் பின்னொரு மொழியாகியும் வருவது திரிபாகி யாகும். த்ரி - மூன்று. பாகி - பாகமுடையது.

இதற்கு உதாரணம் :—

" மூன்றெழுத்து மெங்கோ முதலீ ரொருவள்ளல்
ஏன்றுலகங் காப்ப திடைகடை—யான்றுரைப்பிற்
பூமாரி பெய்துலகம் போற்றிப் புகழ்ந்தேத்துங்
காமாரி காரிமா ரி." (௩௩)

இச்செய்யுளின்கண், 'மூன்றெழுத்துமெங்கோ' என்றது சிவன் எனப் பொருள்படும் 'காமாரி' என்னுஞ் சொல்லினை எனவும், அதன்கண் உள்ள முதலெழுத்தையுங் கடையெழுத்தையுஞ் சேர்க்கக் 'காரி' என்றாய் ஒரு வள்ளலின் பெயராகும் எனவும், இடையெழுத்தையுங் கடையெழுத்தையுஞ் சேர்க்க 'மாரி' என்றாய் உலகத்தினைக் காக்கும் மழை எனப் பொருள் படும் எனவும் அறிக. காமாரி - மன்மதனுக்குப் பகைவனாகிய சிவன்.

இத்திரிபாகியைத் திரிபதாதி என்பர் மாறன் அலங்கார முடையார்.

" மூன்றெழுத் தொருமொழி முதலீ றிடையீ
ரூன்ற பொருள்பிற வாந்திரி பதாதி. "

என்பது சூத்திரம்.

2. "மூன்றொரு வூரின் பேராம்
முதலெழுத் தில்லா விட்டால்
நன்னகர் மன்னர் பேராம்
நடுவெழுத் தில்லா விட்டால்
கன்னமா மிருகத் தின்பேர்
கடையெழுத் தில்லா விட்டால்
உன்னிய தேனின் பேரா
மூரின்பேர் விளம்பு வீரே." (௩௪)

என்ற தனிப்பாடலும் இவ்வணியைப் பின்பற்றியதாகும்.

ஊரின் பேர் - மதுரை. மன்னர் பேர் - துரை. மிருகத்தின் பேர் - மரை. தேனின் பேர் - மது.

இனி, 'நடுவெழுத்தலங்காரம்' என்று பிற்காலத்தோர் எழுதிய கவிகளும் இவ்வணி வகையைச் சார்ந்தனவாம்.

இதற்கு உதாரணம்:—

1. "திருமால்வா கனம்நாவாய் இராசி யொன்று
சினைதெவிட்டார் மாதுலன்கோ கிலமிவ்வேழின்
உருவாமே ழெழுத்தினடு வெனக்குச் செய்தான்
உவந்துபதி ஞன்கனையுந் தானே கொண்டான்
ஒருபாகத் திருத்தினுன் கையி லேற்ருன்
ஒருமதலை தனக்களித்தா னுண்டான் பூண்டான்
பரிவாயொண் கரத்தமைத்தா னுவந்தா
னிந்தப் பைம்பொழிற்றில் லையுளாடும் பரமன்
[ருனே." (டுரு)

திருமால் வாகனம் - (கருடன்) நாகாரி.
நாவாய் - (மரக்கலம்) கலம்.
இராசியொன்று - கன்னி
சினை - கவடு
தெவிட்டார் - ஆரார்
மாதுலன் - மாமன்
கோகிலம் - பல்லி

இவற்றின் நடுவெழுத்தாற் பெற்றது, 'காலன் வராமல்' என்பது. காலன் வராமல் எனக்குச் செய்தான் எனக் கூட்டுக. ஏனைய ஈரேழ் எழுத்துக்களில்,

நாரி (உமை) யை - ஒரு பாகத்திருத்தினுன்.
கம் (தலை) - கையிலேற்ருன்.
கனி (பழம்) - ஒரு மதலை (விநாயகர்) தனக்கு அளித்தான்.
கடு (விடம்) - உண்டான்.
ஆர் (ஆத்தி) - பூண்டான்.
மான் - கரத்தமைத்தான்.
பலி (பிச்சை) - உவந்தான் (விரும்பினுன்)

2.* "இன்னிசைத் தேன்மழை பெய்யு
மகதியே யென்றனுள
மென்னும் பொழிலினி லாடுங்
கலாபியே யிற்றெனயான்

* கலாவதி பக்கம், 83 ; பாட்டு, 102.

பன்ன முடியா வுவதியே
நன்மணிப் பாதிரியே
சொன்ன விவையிற்றி ஞப்பணுற்
றுயெதிர் தோன்றுதியே.'' (௫௬)

என்ற கலாவதி நாடகச் செய்யுளும் இந்நடுவெழுத்தலங்காரத்தின்பாற்படும்.

---

## 20. திரிபங்கி

யாதேனும் ஒரு செய்யுளாய் நின்றே ஒரு பொருள் பயப்பதன்றி, அதுவே மூன்று செய்யுளாய்ப் பிரிந்து முடிந்து வெவ்வேறு பொருள் பயக்கத்தக்கதாகவும் பாடப்படுவது திரிபங்கியாகும்.

திரி - மூன்று; பங்கி-பங்கமுடையது; பங்கம் - பேதம்.

இதற்கு உதாரணம் :—

" ஆதரந் தீரன்னை போலினி யாயம்பி காபதியே
மாதுபங் காவன்னி சேர்சடை யாய்வம்பு நீண்முடியாய்
ஏதமுய்ந் தாரின்னல் சூழ்வினை தீரெம்பி ரானினியார்
ஓதுமொன் றேயுன்னு வாரமு தேயும்பர் நாயகனே.'' (௫௭)

என வரும்.

இக்கட்டளைக் கலித்துறையிலே அடிதோறுமுள்ள முதற்சீர்களையும் இரண்டாஞ்சீர் முதலசைகளையுஞ் சேர்க்க.

" ஆத ரந்தீர்
மாது பங்கா
ஏத முய்ந்தா
ரோது மொன்றே.'' (௫௮)

எனவரும் ஒரு வஞ்சித்துறையாக முடியும். அதன்பின் நான்காஞ் சீர்களிலுள்ள முதலாமசைகள் வரையும் நான்கடிகளிலும் படிக்க,

" அன்னைபோ லினியாய்
வன்னிசேர் சடையாய்
இன்னல்சூழ் வினைதீர்
உன்னுவா ரமுதே.'' (௫௯)

என வரும் வேறொரு வஞ்சித்துறையாக முடியும். நான்கடியினு முள்ள மற்றைய சீர்கள் சேர்ந்து,

திரிபங்கி

| | | |
|---|---|---|
| ஆத ரந்தீர் | அன்னைபோ லினியாய் | அம்பிகா பதியே |
| மாது பங்கா | வன்னிசேர் சடையாய் | வம்புநீண் முடியாய் |
| ஏத முய்ந்தார் | இன்னல்சூழ் வினைதீர் | எம்பிரா னினியார் |
| ஓது மொன்றே | உன்னுவா ரமுதே | உம்பர்நா யகனே |

"அம்பிகா பதியே
வம்புநீண் முடியாய்
எம்பிரா னினியார்
உம்பர்நா யகனே." (சo)

என மற்றொரு வஞ்சித்துறையாயிற்று.

இனித் திரிபங்கியின் மற்றொரு வகை :—

"சங்கந்தா பூணரந் தாமே கலைதாநற்
புங்கவன்மால் காணாப் புலவுடைய-கங்கரா
கோணா கலாமதிசேர் கோடீர சங்கரா
சோணா சலா|சலமே தோ." (சக)

இவ்வெண்பா,

"பூணரந் தாமே கலைதாநற் புங்கவன்மால்
காணாப் புலவுடைய கங்கரா - கோணா
கலாமதிசேர் கோடீர சங்கரா சோணா
சலா|சலமே தோ|சங்கந் தா." (சஉ)

என்று மற்றொரு வெண்பாவாகவும்,

"சலமேதோ|சங்கந்தா|பூணரந் தாமே
கலைதாநற் புங்கவன்மால் காணாப் - புலவுடைய
கங்கரா கோணா கலாமதிசேர் கோடீர
சங்கரா சோணா சலா." (சந)

என்று இன்னுமொரு வெண்பாவாகவும் படிக்கப்பட்டுத் திரி பங்கியாயிற்று.

இது போலச் 'சத்த பங்கி நவ பங்கி'ச் செய்யுள்களும் உள; அவையிற்றினை வந்துழிக் காண்க.




இச்செய்யுட்குப் பொருள்:—நன்மை புங்கவன்மால் காணு புலவுடைய கம் கரா - நன்மை மிக்க பரிசுத்தனாகிய நான்முகனும் திருமாலும் கண்டறியாத புலால் நாற்றம் வீசும் கபாலத்தை ஏந்தும் கையினையுடையாய்! கோண் ஆ கலா மதி சேர் கோடீர வளைவு பொருந்திய பிறைச் சந்திரன் பொருந்திய சடைமுடியை உடையாய்! சங்கரா - சுகத்தைச் செய்பவனே! சோணா-அசலா - பொன் மயமாகிய மலையை இடமாகக் கொண்டவனே! சலம் ஏதோ - கோபம் யாதோ? சங்கம் தா - (யாமிழந்த) சங்க வளையல்களைத் தா; பூண் ஆரம் தா - பூண்டிருந்த மாலைகளைத் தா மேகலை தா - (நழுவியொழிந்த) மேகலாபரணத்தைத் தா (எ-று.)

இது பெண்பாற் கைக்கிளை; தலைவி கூற்று; பாங்கி கூற்றுமாம்.

---

## 21. பிறிதுபடு பாட்டு

அடி தொடைகளை வேறு படுத்தலால் முன்னைய நிலை மாறி வேறொரு செய்யுளாகும்படி பாடப்படுவது பிறிதுபடு பாட்டாகும்.

இதற்கு உதாரணம் :—

" தெரிவருங் காதலிற் சேர்ந்தோர் விழையும் பரிசுகொண்டு
வரியளி பாட மருவரு வல்லி யிடையுடைத்தாய்த்
திரிதருங் காமர் மயிலிய லாயநண் ணுத்தேமொழி
யரிவைதன் னேரென லாகுமெம் மையயா மாடிடமே." (சச)

இதன் பொருள் :—ஐய - ஐயனே ! தெரிவு அருமை பரிசு கொண்டு - அகத்தில் உள்ளார் புறத்தில் உள்ளார்க்குப் புலப்படாத தன்மையையுடையதாய், காதலில் சேர்ந்தோர் விழையும் பரிசு கொண்டு - தன்னிடத்து விடாய்த்து விருப்பத்தோடு சேர்ந்தவர்கள் விரும்பும் தன்மையோடு, வரி அளி பாட - இரேகைகளையுடைய வண்டினங்கள் ஒலிக்க, மருவரும் வல்லி இடை உடைத்தாய் - மணம் பொருந்திய பூங்கொடிகளை இடையிடையே உடையதாய் (விளங்கும்), எம் ஆடு இடம் - யாங்கள் விளையாடும் சோலையாகிய இடம்; திரிதரும் காமர் மயில் இயல் ஆயம் நண்ணு - ஆண்டுச் சஞ்சரிக்கும் மயில்களாகிய விரும்பத்தக்க அழகமைந்த கூட்டம் பொருந்தப்பெற்று; என்று சோலையை விசேடித்து, அது - (அச்சோலை),

தெரிவு அருமை காதலில் சேர்ந்தோர் - பிறர்க்கு இன்னதன்மைத்தென்று புலன் ஆகாத மனமொத்த காதலோடு புணர்ந்த தலைவன் றலைவியர், விழையும் பரிசு கொண்டு - விரும்புந் தன்மையை மேற்கொண்டு, வரி அளி பாட மருவரும் வல்லி இடையுடைய - வரிப்பாடல்களைப் பாடும் வண்டுகள் ஒலிக்கும் பொருந்துதற்கரிய பூங்கொடி போன்ற இடையினையுடைய, திரிதரும் காமர் மயில் இயல் ஆயம் நண்ணுத் தேன் மொழி அரிவை தன் நேர் எனலாகும் - சோலையிற் றிரியும் விரும்பத் தக்க மயில் போன்ற சாயலையுடையளாய்த் தனது பாங்கியர் கூட்டத்தைச் சேராது தனிப்பட்ட இனிய மொழியினையுடைய பெண்ணாகிய தலைவிக்குச் சமானமாக விளங்கும் (எ - று.)

இச்செய்யுளிலுள்ள சிலேடையை அங்கமாகப்பெற்ற ஒப்புமையின் நயத்தை உய்த்துணர்க.

மேற்கண்ட கட்டளைக் கலித்துறை,

"தெரிவருங் காதலிற் சேர்ந்தோர் விழையும்
பரிசு கொண்டு வரியளி பாட
மருவரு வல்லியிடை யுடைத்தாய்த் திரிதருங்
காமர் மயிலிய லாய நண்ணுத்
தேமொழி யரிவைதன் னேரென
லாகுமெம் மைய யாமா டிடமே." (சரு)

என ஒரு நேரிசையாசிரியப்பாவாகக் கொள்ளப்படுமாறும் உணர்க.

---

## 22. விருச்சிக பந்தம்

தேளின் உருவம் போலமைத்த சித்திரத்தில் முன் புறத்தி லுள்ள இடுக்கிகள் ஒவ்வொன்றிலும் நந்நான்கெழுத்துக்களும், தலையிலொன்றும் முதுகில் நான்குமாக ஐந்தெழுத்துக்களும், ஒரு பக்கத்திற்கு நான்கு கால்களாக இரு பக்கத்திலுமுள்ள எட்டுக் கால்களுக்கும் எட்டெழுத்துக்களும், மணியொன்றனுக்கு ஓரெழுத்தாகக் கொடுக்கிலுள்ள ஆறு மணிகளிலும் ஆறெழுத்துக் களும் அமைய, வலப்புற இடுக்கியில் ஏறியிறங்குமாறு எழுத் துக்கள் மாலை மாற்றாகப் பொருந்தப் பாடுஞ்செய்யுள் விருச்சிக பந்தமாம். விருச்சிகம் - தேள்.

இதற்கு உதாரணம்:—

1.* "திங்கண்முக மானேதே னேமாகச் செங்கமல
மங்கைதிற நின்வாய் மலர்." (சசா)

இதன் பொருள்:—திங்கள் முகம் மானே - சந்திரன் போன்ற முகத்தையுடைய மான் போன்றவளே! தேனே - தேன்போலினிப்பவளே! மாகம் செம்மை கமலம் - மங்கை திற நின் வாய் மலர் - விண்ணிலுள்ள சிவந்த தாமரை மலர்மே லுறையும் மங்கையாகிய திருமகள் போன்றவளே! நீ நினது மலர் போன்ற வாய் மலர்ந்தருள்வாய் (பேசுவாய்). (எ - று)

இக்கலாவதி நாடகச் செய்யுளில், 'கமானே தேனேமாக' என்ற பகுதி மாலை மாற்றாய் அமைந்து வலப்புற இடுக்கியில் ஏறியிறங்குவது காண்க.

* கலாவதி பக்கம், 148 ; பாட்டு, 215.

2. "சேம னன்பர் சேவிகவி சேர்புலவ ராராயு
மாமதமன் னேப்பணிகு வாம்." (சஎ)

இதன் பொருள்:—சேமன் அன்பர் சேவி - இடப வாகனத்தையுடைய தலைவனாகிய சிவபெருமானது பக்தர்கள் வணங்கும், கவி சேர் புலவர் ஆராயும் - பொருள் பொதிந்த சொற்களால் செய்யுட்களைச் செய்யும் புலவர்களால் ஆராயப்பட்ட, மா மதம் மன்னைப் பணிகுவாம் - பெருமை வாய்ந்த மத ஜலத்தைச் சொரியும் யானை முகத்தையுடைய விநாயக மூர்த்தியை வணங்குவாம் (எ - று.)

இவ்விநாயக வணக்கமாகிய குறள் வெண்பாவில், 'ர் சேவிகவிசேர்' என்ற பகுதி மாலை மாற்றாய் வலப்புற இடுக்கியில் ஏறியிறங்குவதோடு, இச்செய்யுளையியற்றிய ஆசிரியனது இயற்பெயர் விருச்சிக சித்திரத்தின் உடலில் (தலையிலும் முதுகிலும்) அமைந்து கிடப்பது உணரத்தக்கது.

3. " வருதியோ வவியா
தருதயா விமலன்
பரிதிமால் பதமே
கருதநீ மனமே. "

இதன் பொருள் :—மனமே - நெஞ்சமே! அவியா தருதயா விமலன் - அழியாத செல்வமாகிய கல்வியை மாணுக்கர்க்கு அருள் செய்து போதிக்கும் கருணை மூர்த்தியும் பரிசுத்தனுமாகிய, பரிதி மால் பதமே - சூரியநாராயணன் என்னும் இயற்பெயர் வாய்ந்த ஆசிரியனது பாதங்களையே, கருத - தியானித்து வணங்க, நீ வருதியோ - நீ வருவாயோ? (எ - று.)

பரிதி - சூரியன்; மால் - நாராயணன். 'பரிதி மால்' - சூரிய நாராயணன் என்ற இயற்பெயரின் பொருளைத் தரும் புனைவுப் பெயர். இச்செய்யுள், விற்பூட்டு. அவியா, வினையாலணையும் பெயர். ஆசிரிய வணக்கமாகிய இக்கவியில் 'வியாதருதயாவி' என்ற பகுதி மாலை மாற்றாய் வல இடுக்கியில் ஏறியிறங்குவது காண்க.

---

## 23. சதுரங்க துரக கதி பந்தம்

பக்கத்திற்கு எட்டுக் கட்டங்களமைந்து அறுபத்து நான்கு கட்டங்களடங்கிய சதுரங்க சித்திரத்தில், ஒரு கட்டத்தினின்று புறப்பட்ட குதிரை ஒன்று குதித்த இடத்தில் மீளவுங் குதிக்காமல் அறுபத்து நான்கு கட்டங்களிலும் ஒன்றும் விடாமற் செல்லுங்கால் செய்யுளிலுள்ள வரிசைப்படி எழுத்துக்களைக் கட்டத்திற்கு ஓரெழுத்தாக அமையுமாறும், நேர் வரிசையிலோ கோணுத்தரங்களிலோ, அன்றி வேறு விதமாகவோ இஷ்டமான பெயர்களும் சொற்றொடர்களும் புலப்படப் பொருந்துமாறும் புலவனியற்றும் கவி சதுரங்க துரக கதி பந்தமாம். துரகம் - குதிரை; கதி நடை.

இதற்கு உதாரணம் :—

"தேரினெந் நெஞ்சநீ திரித லென்கொலோ
நாரொடும் வியன்றமி ணயந்து தூவிய
காரெனும் பரிதிமால் கணங்கொள் பூவரா
ரீரடி யேழைசூட் டியையப் போற்றுவாம்." (சஅ)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தே | ஞ் | டி | நீ | த | போ | யை | சூ |
| ர | ன் | ரி | ற் | யே | ட் | ரி | ப் |
| நெ | ம் | ச | லெ | தி | ய | ழை | டி |
| கொ | ரீ | று | னெ | நா | வ | ப | ய |
| வா | ங் | லோ | ரா | ம் | வி | றொ | பூ |
| மி | ய | ய | க | கொ | மா | கா | ரி |
| ங் | ண | ற | வி | தூ | னு | ள் | டு |
| ன் | ண | து | ங் | ல் | ம் | தி | ரெ |

இது வல்லீ பரிணய நாடகத்தில் ஆசிரிய வணக்கச் செய்யுள்.

இதன் பொருள் :—தேரின் - ஆராயுமிடத்து, எம் நெஞ்சம் - எமது நெஞ்சமே! நீ திரிதல் என் கொலோ - நீ கண்ட இடங் கடோறும் சென்று திரிதல் யாது கருதியோ ? நாரொடும் - அன் போடும், (மாணக்கர்க்கு), வியன் தமிழ் நயந்து தூவிய - பெருமை வாய்ந்த தமிழினை விரும்பிச் சொரியும் (போதிக்கும்), கார் எனும் பரிதி மால் - மேகத்தினையொத்த சூரிய நாராயணப் பெயர்கொண்ட ஆசிரியனது, கணம் கொள் பூவர் ஆர் இரண்டு அடி - கூட்டமாகப் பொருந்திய தாமரைப் பூவின் தன்மை பொருந் திய உபய பாதங்களும், ஏழை சூட்டு இயைய போற்றுவாம் - எளியேமாகிய எமது உச்சியிற் பொருந்துமாறு அவற்றை வணங்குவோம் (எ-று.)

பல வேறு நற்பயன்களையும் அளிக்கும் செந்தமிழ் மழை யினை மாணுக்கர்க்குச் சொரிந்த கைம்மாறு கருதாத் மேகம்

போன்ற சூரிய நாராயண வள்ளலினது பாத பதுமங்களை உச்சியிற்கொண்டு (நமஸ்கரித்து) வணங்குவதே காரியமாதலின், நெஞ்சமே! நீ பல விஷயங்களிலும் போய்ப் பயனின்றித் திரிவதை விட்டு எம்மோடு கூட வணங்க வருவாய்,' என்று நெஞ்சை விளித்துக் கூறியதாம் இச்செய்யுள். என் கொல் ஓ - கொல் ஓ இரண்டும் அசை. 'தமிழ் நயந்து' என்பது 'தமிணயந்து' என்றாயது, **வீர சோழியம்** சந்திப்படலத்து "ஐம்மூன்றதாம்" என்ற கட்டளைக் கலித்துறையில், "மெய்ம்மாண்ப தாநவ் வரின் முன் னழிந்துபின் மிக்கணவ்வாம்" என்ற விதியானமைந்தது; அன்றி, மரூஉ மொழியுமாம். பூவர் - மொழியிறுதிப்போலி.

இச்செய்யுளைச் சதுரங்க துரக கதி பந்தத்தில் அமைத்து நோக்குங்கால் இடப்புறங் கீழிருந்துவலப்புறம் மேனோக்கிச் செல்லும் கோணாந்தரத்தில் ஆசிரியர்தம் இயற்பெயராகிய 'சூரிய நாராயணன்' என்னும் நாமம் பொருந்துவதை உற்று நோக்குக. செய்யுளில் 'பரிதிமால்' என்னும் புனைவுப் பெயரும், சித்திரத்தில் 'சூரிய நாராயணன்' என்னும் இயற்பெயரும் அமைந்துள்ளன.

இனி இரதபந்தம், கடக பந்தம், பதும பந்தம் முதலியவற்றின் இலக்கணங்களையும் அவற்றிற்கு உதாரணங்களையும் **மாறனலங்காரத்**திலும் வில்வதளபந்தம் முதலியவற்றை வடமொழியலங்கார சாத்திரங்களிலும் காண்க. காஞ்சிப் புராணம் சுரகரீசப் படலத்திலும், திருநாகைக்காரோணப் புராணம் நந்திநாதப் படலத்திலும், திருஞான சம்பந்தர் தேவாரத்திலும் அருமையாய் அமைந்துள்ள சித்திர கவிகள் தமிழணி நலங்கற்க விரும்புநர் பார்த்து இன்புறற்பாலன.

சுபம்

---